# குழந்தையும் தெய்வமும்

*நூலாசிரியர்*

**ல. சண்முகசுந்தரம்**

52, இரண்டாவது தெரு, என்.ஜி.ஒ. காலனி,
குரோம்பேட்டை, சென்னை - 600 044.

*குழந்தையும் தெய்வமும் என்னும் இந்நூல் திருமலை திருப்பதி தேவஸ்தானத்தில் பொருளுதவி பெற்று வெளியிடப்படுகிறது.*

முதற் பதிப்பு
நவம்பர் 2001

விலை ரூ. 50/-




| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | — | குழந்தையும் தெய்வமும் |
| ஆசிரியர் | — | **வித்வான் ல. சண்முகசுந்தரம்** |
| பதிப்பகம் | — | சண்முகம் பதிப்பகம் |
| பதிப்பாண்டு | — | 2001 - நவம்பர் |
| பக்கம் | — | 240 |
| அச்சு | — | 11 Point |
| தாள் | — | Navgan Creamwove |
| கட்டுமானம் | — | சாதாரணம் |
| விலை ரூ. | — | 50/- |
| மொழி | — | தமிழ் |

Shakti Printers & Enterprises, Chennai - 21.

# பொருளடக்கம்

பக்கம்

# முகவுரை

இன்ப நுகர்ச்சியையே குறிக்கோளாக உடையது உயிர்.

இன்பநுகர்ச்சி பெற வேண்டும் என்று விருப்பம் இருக்க லாம். ஆனால் உடம்பு என்கிற ஒன்றைப் பெற்றால்தான் உயிரால் இன்பத்தைப் பெற முடியும்.

உடம்பு இல்லை என்றால் உயிருக்கு இன்ப உணர்ச்சி (ஒன்றுமே) இல்லைதான்.

இதைத் தெரிந்துதான் பேதமே இல்லாத ஒரே ஒரு உயிர்த் தத்துவம் கோடான கோடி பேதங்களில் எண்ணற்ற உருவங்களால் (உடம்போடு சேர்ந்து) பிறக்கின்றது. வாழ்கின்றது.

சின்னஞ்சிறிய புல்லிலிருந்து பெரிய மரம் வரை சிற்றெறும் பிலிருந்து யானைவரை, புழுப் பூச்சியிலிருந்து மனிதன் வரை எல்லாமே உடம்போடுசேர்ந்தே பிறக்கின்றன.

ஆண், பெண் என்கிற வேறுபாட்டோடும் பிறக்கின்றன.

இன்பநுகர்ச்சி என்கிற ஒன்றை நோக்கித்தான் அத்தனை செயல்களும்.

இனி, உயிரினங்களின் வகைகள் எண்ணில் அடங்காதவை. அவ்வளவிலும் இணையற்ற உயிரினம் மனித இனந்தான்.

அறிவு, பேச்சு, அனுபவம், செய்தொழில், கலை இவை போன்ற உன்னதங்கள் மனிதனிடந்தான் உண்டு.

அதனால் நிகரற்று உயர்ந்து விளங்குகிறான் மனிதன்.

இனி, மனிதனைத்தவிர ஏனைய உயிரினம் அவ்வளவிற்கும் இன்ப நுகர்ச்சி என்பது குலவிருத்தியோடு சரி.

குலவிருத்திக்காக உடலுறவு கொள்வதோடு சரி, அதனால் இந்த அளவிற்குத்தான் - தேவைக்கு ஏற்றபடி தான் ஏனைய உயிர்வர்க்கங்களுக்கு தேகதத்துவம் அமைந்துள்ளன.

ஆனால் மனித காரியம் குலவிருத்தியோடு நின்று விடுவ தில்லை. குலவிருத்திக்காக மட்டும் உடலுறவு என்பதோடு திருப்தி அடைவதில்லை மனித இயல்.

இனி, ஒரு தாய் தன் குழந்தையைப் பார்த்துப் பார்த்து மயங்குவாள், குழந்தையின் உச்சிமுதல் உள்ளங்கால்வரை அணு

அணுவாக ஒவ்வொரு அம்சத்தையும் பார்த்துப் பார்த்துப் பரவசம் அடைவாள்.

குழந்தையின் கண்ணைப் பார்ப்பாள். நெற்றியைப் பார்ப்பாள், வாயைப் பார்ப்பாள், சிரிப்பைப் பார்ப்பாள், பார்க்கப் பார்க்கத்தாயின் உள்ளம் உருகும். அப்படியே குழந்தையைக் கட்டி அணைப்பாள், முத்தம் கொடுப்பாள்.

குழந்தையின் முதுகைத் தடவுவாள், நெஞ்சை வருடுவாள், குழந்தையின் கையை எடுத்து அதன் உள்ளங்கையைப் பார்ப்பாள். அதில் முத்தம் கொடுப்பாள். அப்படியே குழந்தையின் உச்சிமோப்பாள். அதிலும் முத்தம் கொடுப்பாள். தலைமுடியைப் பிடித்து ஒவ்வொரு இழையாக ரோமத்தைப் பிரித்தெடுப்பாள். அந்த முடிக்கும் முத்தம் கொடுப்பாள்.

குழந்தையின் முழங்காலை வருடுவாள். பாதத்தைப் பூப்போலத் தடவிக் கொடுப்பாள். பிறகு உள்ளங்காலைத் தூக்கிப் பார்ப்பாள்.

அதைக் கண்ணில் ஒற்றி அதற்கும் முத்தம் கொடுப்பாள்.

ஆயிரம் ஆயிரம் முறைகளில் குழந்தையைக் கொஞ்சிக் குலாவுவாள் தாய்.

அப்பொழுதும் அவள் ஆவல் அடங்காது.

தாயின் நிலைதான் மனித வர்க்கம் முழுவதுக்கும்.

காதலர்கள் ஒருவரை ஒருவர் கொஞ்சிக் குலாவிச் சீராட்டிப் பாராட்டுவதைப் போலவே ஒவ்வொரு மனித ஜீவனும் தாயைத், தந்தையை, குழந்தைகளை, உடன் பிறப்புக்களை, உற்றார், உறவினர்களை, நண்பர்களை, பண்புடையாளர்களை மதித்து உபசரித்துப் பாராட்டிப் புளங்காகிதம் அடைகின்றன.

மனிதர்களை மட்டுமல்ல இசையை, நடனத்தை, ஓவியத்தை, விஞ்ஞானத்தை, மெய்ஞ்ஞானத்தை, கவியை, சமையலை, போர்க்கலையை, பசுவை, வீட்டை, பாத்திர பண்டங்களைக்கூட மதித்து உபசரித்து இன்புறுகின்றன மனித தத்துவம்.

தொட்டு மகிழ, கட்டிப்பிடிக்க, முத்தம் கொடுக்க, மயங்க, உருக, ஆனந்தத்தில் திளைக்க, திளைத்த ஆனந்தத்தை வெளியிட மனித இனம் ஒன்றுக்குத்தான் வாய்ப்பான உடம்பும், வளமான மனமும் உள்ளன.

இத்தனை வசதியும் வாய்ப்பும் சிங்கத்திடம் உண்டா? யானையிடம் உண்டா? ஆலமரத்திடமோ, அருகம்புல்லிடமோ உண்டா? இல்லை. இல்லவே இல்லை.

மனித இனம் ஒன்றுக்குத்தான் வளமான உடம்பும், மனமும், மனித இனம் என்றால் கோடான கோடி ஆண்டுகளாகத் தவம் இருந்து வந்த ஒரு செல்வம்.

நேற்றுப் பெய்த மழைக்கு இன்று முளைத்த சிறுகீரை இல்லை மனிதன்.

குலவிருத்தி முக்கியந்தான். ஆனால் குலவிருத்தி போன்ற முக்கிய காரியங்கள் பல மனித வாழ்க்கையில் பொதிந்து கிடக்கின்றன. அவற்றை இதழ் இதழாக விரித்து நறுமணம் கமழ வைக்கிறான் மனிதன்.

மனிதனை, வாழ்க்கையை, உணர்ச்சிகளை, பண்பாட்டை உற்று நோக்கினார்கள் நம் நாட்டு ஞானியர்.

ஆழ்வார்கள், நாயன்மார்கள் முதலிய மெய்யடியார்கள் நோக்கி நோக்கிப் பரவசப்பட்டார்கள்.

மனிதன் மேலும் மனித வாழ்க்கையின் மேலும் பக்தியே உண்டாகிவிட்டது மெய்யடியார்கட்கு.

அடடா, மண்ணுக்குள்ளிருந்து பச்சை, சிவப்பு, நீலம், மஞ்சள் என்று நவரத்தினங்கள் விளைந்து வருவது போலல்லவா மனிதனிடமிருந்து உணர்ச்சிகள் விளைந்து வருகின்றன என்று அதிசயப்பட்டார்கள் ஆழ்வார்கள்.

நெல்லையும், கரும்பையும், வாழையையும், காய் கனிகளையும் புஷ்பங்களையும், தேனையும், நெய்யையும் சுரந்த வண்ணமாக இருக்கிறது பூமி. அப்படியல்லவா மனித வாழ்க்கையானது பண்பாட்டையும், கலைகளையும், உணர்ச்சிகளையும் சுரந்து கொண்டே இருக்கிறது என்று காதல் வெறியே கொண்டுவிட்டார்கள் ஆழ்வார்கள்.

தங்கள் காதல் அதாவது பக்தியானது கால வெள்ளத்தில் கரைந்துவிடக் கூடாதே என்று ஆதங்கப்பட்டார்கள்.

அந்த ஆதங்கம்தான் தெய்வத்தின் மேல்வைத்து தங்கள் ஆனந்தபரவசங்களைக் கவிதைகளாக அபிஷேகம் பண்ணவைக்கின்றன. அனுபவங்களையும் அனுபவங்களின் வெளியீடாகிய

கலைகளையும் சன்னிதானத்தின் கருங்கல்லில் பொதிந்து வைத்தால் போதும் - இறைவனின் திருவடி நிழலில் வைத்துவிட்டால் போதும் மனிதன் உள்ளளவும் அவை நிலைத்து நிற்கும்.

இசை, நடனம், கவி, ஓவியம் முதலிய கலைகள் கோவிலோடு இணைந்து நிற்கின்றன. அதனால் இன்றளவும் பழுது படாமல் நிலைத்து நிற்கின்றன.

பன்னிரு ஆழ்வார்களில் பெரியாழ்வார், ஆண்டாள் இருவருடைய பாடல்களுக்கும் விளக்கம் கொடுத்து குழந்தையும் தெய்வமும் என்னும் நூல் வடிவில் அதை வெளியிடுகிறோம்.

அவர்களுடைய பாடல்கள் மூலம் பார்த்தால் மனித வாழ்க்கையின் மாண்பு இன்னதென்று தெரியும். வாழ்க்கையில் பூத்து மணக்கும் அன்பு, பொறுமை, ஆற்றாமை, கலக்கம், சோர்வு, உல்லாசம், ஊடல், கூடல், எக்களிப்பு, ஆனந்தம் முதலிய உணர்ச்சிகள் படலம் படலமாக விரிந்து ஒளிவீசுகிறதும் தெரியும்.

இனி குழந்தை ஒவ்வொன்றையும் கண்ணனாக - தெய்வமாகவே அனுபவித்து ஆனந்திக்கிறார் பெரியாழ்வார்.

ஆண்டாளோ அன்பின் வேகத்தை - காதலையே பரம்பொருளுக்கு மாலைகட்டிக் கட்டிச் சூட்டி மகிழ்கிறார்.

உதாரணத்துக்கு ஒன்றிரண்டு பாடல்கள். கொழுகொழு என்றிருக்கிறது குழந்தை. அதன் அட்டகாசத்துக்கு அளவே இல்லை.

தாயைப் பாடாய் படுத்துகிறது குழந்தை. ''என்னடியம்மா! நாளுக்கு நாள் உள்ளேயே போகிறாய், அடையாளமே தெரியவில்லையே! ஏன் இப்படி'' என்று பக்கத்துத் தெருக்காரி ஒரு தாயிடம் கேட்கிறாள்.

தாய் என்ன சொன்னாள் பதில். ''எல்லாம் இந்தப்பிள்ளை (கண்ணன்) படுத்துகிற பாடுதான்.

தொட்டில் வேட்டியையே மிதித்து மிதித்து தும்புதும்பாய்க் கிழித்து விடுகிறான்.

பிறகு என்னை என்ன பாடு படுத்த மாட்டான்? இடுப்பில் எடுத்து வைத்தால் ஒரு உன்னு உன்னுகிறான். காலால் பளார்

பளார் என்று அடிக்கிறான் குறுக்கே முறிந்துவிடும் போல் இருக்கிறது.

தூக்கி மார்புக்கு நேரே வைத்துப் பார்த்தால் மிதிமிதி என்று வயிற்றில் எற்றுகிறான்.

அப்படித் துவைத்து எடுக்கிறான் என்னை''.

இனிப்பாடல்:

கிடக்கில் தொட்டில்
  கிழிய உதைத்திடும்
எடுத்துக் கொள்ளின்
  மருங்கை இறுத்திடும்,
ஒடுக்கிப் புல்லின்
  உதரத்தே பாய்ந்திடும்;
மிடுக்கி லாமையின்
  நான்மெலிந் தேன்நங்காய்;

(மருங்கை இறுத்திடும் - இடுப்பையே ஒடித்துவிடுகிறான் மிதிக்கிற மிதியில், ஒடுக்கிப் புல்லில் - அணைத்து மார்போடு வைத்தால், உதரம் - வயிறு, மிடுக்கு இலாமையால் - இந்தப் பிள்ளையின் அட்டகாசத்தைத் தாங்க முடியாமல் - தாங்குவதற்கு ரிய பலம் இல்லாமையால். நங்காய் - நங்கையே கேளடியம்மா இவன் கதையைக் கேள்.)

**குறிப்பு:** குழந்தையை எப்படி அனுபவிக்கிறார் பெரியாழ்வார். தாயாக இருந்தே அனுபவிக்கிறார்.

இனி, கண்ண (பைய)னைப் பற்றி அடுக்கடுக்காக பிராது கொடுக்கிறாள் தாய்.

பிராது கொடுத்துக்கொண்டே உதைத்து மிதிக்கும் கண்ணனுடைய கால்களை வருடிக்கொடுப்பாள் தாய். பிடித்து விடுவாள் தாய். அப்படியே எடுத்துக்கண்களில் ஒற்றி முத்தம் கொடுப்பாள். பூவிலும் மெல்லிய அந்தக் கால்களுக்கு - திருப்பாதங்களுக்கு.

அப்பொழுது தாய்க்கு உண்டாகிற பரவசத்துக்கு அளவே இல்லை.

பாடலைப் பாடப்பாட அந்தப்பரவசம் நமக்கும் வரும்.

இனி, உயிர்த்தத்துவம் நுட்பமானது கண்ணுக்குப் புலப்படா நுண்மையானது. சின்னஞ்சிறியது.

குறிப்பு:

சின்னஞ்சிறிய கண்ணின் மூலமாக கடல், மலை, வானம் எல்லாவற்றையும் பார்க்கிறோம். பெரியாழ்வார், ஆண்டாள் முதலிய அருளாளர்கள் பாடல்களின் மூலமாகவும் மனிதன், வாழ்க்கை, பண்பாடு, உணர்ச்சி எல்லாவற்றையும் பார்க்கலாம்.

பல ஆயிரம் ஆண்டுகளாக வாழ்க்கையோடு உருண்டு புரண்டு வந்திருக்கிற மனித வரலாறு அப்படியே தெரியும் பாடல்கள்.

இது போல் எத்தனையோ பாடல்கள். இவ்வளவையும் அனுபவிக்க நமக்கு ஆயுள் நாள் காணாது. ஆனால் பாசுரங்களை பாடப்பாட ஆயுள் விருத்தியாகும். ஆரோக்கியம் பெருகும். மனம் தூய்மை பெறும். நோய் நொடி எதுவும் தலை காட்டா.

ஆனந்த மயமாக இருக்கலாம் நாம்.

# இதுதான் அணிந்துரை

02-07-2001

அன்பு மயமான நண்பர் வ.ச. சார் அவர்களுக்கு, வணக்கம்.

நீங்களும், லக்ஷ்மியும், பிள்ளைகளும் நலமாய் இருப்பீர்கள்.

நலம் என்பது உடல் நலம் மட்டுமல்ல. மனநலமும் கூடத்தான்.

உடல் நலமாக இருந்தும் மனம் மருகிக்கொண்டு இருப்பவர்கள் எத்தனையோ பேர் இருக்கிறார்கள்.

வாழ்க்கையை அனுபவிக்கத் தெரிந்து, மனசில் கனமில்லாமல் இருப்பது என்பது அருமை.

மேலகரத்திலும், தென்காசியிலும் சிங்கக்குட்டி, புலிகுட்டி, மான்குட்டி இவைகளோடு ஜிஞ்சாம்ருதமாக வாழ்ந்து கொண்டிருந்த அதே ல. ச. இப்போது குரோம்பேட்டையில் இருந்து விளக்கம் தந்து வருகிறீர்கள்.

வாழ்க்கை பயனுள்ள வாழ்க்கையாக இருப்பதும், வழிகாட்டும் வாழ்க்கையாக இருப்பதும் எங்களுக்குக் கிடைத்த பேறு.

''வயசாக வயசாக ஒத்த உணர்ச்சி ஒன்று போதும், வேறொன்றுமே வேண்டாம் என்று சொல்லத் தோன்றுகிறது. சாப்பாடு கூட வேண்டாமோ என்று சொல்லத் தோன்றியது வள்ளுவருக்கு.

டாக்டர் ஜான்ஸன் என்ற ஆசிரியருக்கும் அப்படித்தான் தோன்றியது. அவர் நல்ல மேதாவிகளான சங்கத்தோடு தினம் தினம் பழகி வந்தார்'' - (ஒரு கடிதத்தில்)

தாத்தாவிற்கு ஒத்த உணர்ச்சியைத் தந்தவர்களில் முக்கியமானவர் நீங்கள். இளம் வயதினராய் இருந்த போதிலும் எப்பேர்ப்பட்ட துணையாக இருந்தீர்கள்!

---

சிங்கக்குட்டி, மான் குட்டி என்பவை எல்லாம் குழந்தைகளுக்கு ல.ச. வைத்த செல்லப்பெயர்.

'சண்முக சுந்நதரத்தைக் கூட்டிக்கொண்டு வா' என்று ஏன் சொன்னார்கள் என்பது புரிகிறது இப்போது.

தலைமுறை இடைவெளி Generation Gap) இப்போது பேசப்படுகிறது.

முதியவர்களுக்கு மரியாதை கொடுக்கத்தான் செய்கிறார்கள். ஆனால் கருத்து மாறுபாடு என்னவோ இடைவெளியை ஏற்ப டுத்தி விடுகின்றது.

இளம் தலைமுறையைச் சார்ந்த நீங்கள் ஒத்த உணர்ச்சி கொண்டிருந்தது தாத்தாவுக்கு எவ்வளவோ பலமாகவும், உத்ஸா கங்கொடுப்பதாகவும் இருந்திருக்கிறது.

இன்னொரு கடிதத்திலிருந்து:

''அதிர்ஷ்ட திசை எங்கே உச்சத்தில் இருக்கிறது என்றால் இந்த வயசில் கிடைத்த நட்பு வளந்தான். என்னோடு ஒன்றான நண்பர்கள் எத்தனையோ பேர் கிடைத்திருக்கிறார் கள். சதா என்னுடைய க்ஷேமத்தில் கண்ணும் கருத்துமாய் இருக்கிறார்கள். தாங்களும் அக்காளும் கொட்டுகிற பேரன்பு ஒருவனுக்கு எளிதில் இருபது வருஷ ஆயுள் கொடுத்து விடும்.

......கலையில் எல்லாம் கலை அன்பை அனுபவிக்கிற கலைதான். இந்தக் கலையில் ரசிகமணிதான் நான்''.

அந்த நட்பு வளத்தைச் சேர்ந்தவர் நீங்கள்.

உங்களோடெல்லாம் பழகும் பாக்கியம் எனக்கும் கிடைத்திருக்கிறது. இதை எண்ணி, எண்ணி பூரித்துப் போகும் இயல்புடையவனாய் இருக்கிறேன்.

அண்மையில் ராமைய்யங்காரின் பேத்தி கல்யாண அழைப்பு வந்தது. என்னால் வாழ்த்துதான் அனுப்ப முடிந்தது.

அவர் மகன் லட்சுமணனுக்கு எழுதிய கடிதத்தில் எப்பேர்ப்பட்ட அன்பும் பண்பும் கொண்டிருந்த உயர்ந்தவ ராக அவர் இருந்தார் என்று நினைவு கூர்ந்தேன்.

என் சாதாரண வாழ்க்கையில் இப்பேர்ப்பட்ட எண்ணங் களெல்லாம் எனக்கு ஒரு உந்து சக்தியாக இருக்கின்றன.

''பாட்டும் இசையும்'' என்ற அருமையான நூலைத் தமிழுக்கு அளித்துள்ளீர்கள்.

மேற்கோள் காட்டுவதற்கும் சில கருத்துக்களை விளக்கு வதற்கும் - கவிதை பயன்பட்டு வருகிறது.

கவிதையை அனுபவித்தல் அற்று விட்ட நிலை. நீங்கள் ஒருவர்தான் இருக்கிறீர்கள். கவிதையை அனுபவிப்பதோடு அதை எடுத்து விளம்பவும் செய்கின்றீர்கள். உண்மையான ஈடுபாட்டுடன் உணர்ச்சிகளை வெளிப்படுத்தவும் செய்கிறீர் கள்.

பொழிப்புரை, கருத்துரை என்றெல்லாம் கவிதையைப் பிரித்து விளக்கம் தந்த முறையிலிருந்து வேறுபட்டு கவிதையை முழுமையாகப் பார்த்து அனுபவித்து ஆனந்தப் பட வைத்தவர் இலக்கிய வரலாற்றிலேயே ஒருவர்தான் என்று முத்திரை பதிப்பித்தவர்கள் வழித்தோன்றல் நீங்கள்.

இனி கவிதை அனுபவம் என்பது இல்லாமல் போய்வி டும் என்று தோன்றுகிறது.

ஆளுடைப் பிள்ளையாரின் தமிழ்த்தொண்டும், சமயத் தொண்டும் புதிய கோணத்தில் ''பாட்டும் இசையும்'' நூலில் காணக்கிடைக்கிறது.

அந்தண குலத்தவராயினும் பழந்தமிழ் நாட்டின் வழி பாட்டு முறைகளையே அவர் எடுத்துக்கொண்டார் என்பதை முக்கியமான செய்தியாக வைத்துள்ளீர்கள்.

தன்னை உணர்தல் என்பது மிகமிக அபூர்வமான அனுபவம். தன்னை முற்றிலும் உணர்ந்த மாணிக்க வாசகர் உலகம், மக்கள், உணர்ச்சி எல்லாவற்றையும் உணர்ந்து பாடியுள்ளார் என்பது ஒரு நல்ல, சிறப்பான கருத்து.

'கல்லா மனிதர்' என்ற திருத்தத்தை அழுத்தமாகக் காட்டி விட்டு ஐந்தே வரிகளில் பரிணாம வளர்ச்சியின் வரலாற்றைச் சொல்லியிருக்கும் பாங்கினைக் காட்டியிருப் பது உள்ளத்தை ஈர்க்கிறது.

சிவபெருமானின் திருஉருவப் பொலிவினை நான்கு வேளைகளைக் கொண்டு காரைக்காலம்மையார் அலங்கார மாகச் சொல்லியிருப்பதை எடுத்துக் காட்டியிருப்பது சுவை யாக இருக்கின்றது.

பேய் என்று சொல்லும் கதை பற்றியெல்லாம் தெளிவு பிறந்து விடுகிறது உங்கள் மூலம்.

அகத்தியர் வரவு, திருமூலர் வரவு என்பதெல்லாம் சைவ அலையின் அடையாளமே என்பதும், திருமூலர் பற்றிய கதையைப் பிடித்துத் தொங்கக் கூடாது என்பதும் நல்ல விளக்கங்கள்.

பெரியாழ்வார் பற்றிய கட்டுரை தனித்து நிற்கிறது.

சித்தத்தை சிவன்பால் வைத்தல் என்றால் என்ன என்பது விளங்குகிறது.

குழந்தையாய் வருவதும் கடவுள். அதே போல் கவிதையாய் வருவதும் கடவுள்தான் என்பதும் நல்லதொரு சிந்தனை.

என் கருத்தில் தோய்ந்தனவற்றைச் சொன்னேன். சொல்ல முயற்சி செய்தேன். அவ்வளவுதான்.

சந்துரு மூலம் ''தமிழும் தாவரமும்'' புதிய பதிப்பைக் கொடுத்து விட்டீர்கள். மிகவும் அழகாய் அமைந்துள்ளது.

நீங்கள் முதன் முதலில் எனக்கு அளித்த உங்கள் படைப்பு ''தமிழும் தாவரமும்''. பின்பு எல்லா நூல்களை யும் நான் பெற்று விட்டேன். எல்லாம் பொக்கிஷமாக இருக்கின்றன.

நாச்சியார்புரத்தில் உள்ளவர் வேளாண் விஞ்ஞானிக ளுக்கே தெரியுமா, தெரியாதா என்று வியக்கும் வண்ணம் தாவர நுட்பங்களையும் அவை சம்பந்தமான கவிதைகளை யும் இணைத்து வழங்கினீர்கள் பல ஆண்டுகளுக்கு முன்பே. அந்த அதிசயம் அப்படியே நிற்கின்றது.

மிக்க சந்தோஷம்.

எல்லாருக்கும் அன்பு.

உங்களுக்கு வணக்கம்
அன்பன்
**தீப. சிதம்பரநாதன்**

# முன்னுரை

உலகில் எத்தனையோ மலைகள் இருக்கின்றன. அத்தனையும் கல்லும் மண்ணுமாகவே உள்ளன. காடுகளும், நீரூற்றுகளுமாய்க் காட்சி தருகின்றன அவை. அவ்வளவுதான்.

ஆனால் திருப்பதி — திருமலையோ தெய்வமாகவே இருக்கிறது. திருமாலாகவே இருந்து அருள் பாலிக்கிறது.

யார் யாருக்கு என்னென்ன தேவையோ அவ்வளவையும் அள்ளி அள்ளிக் கொடுக்கிறார் திருமால். திருமலை என்னும் திருப்பதியாக நின்றே அள்ளி அள்ளிக் கொடுக்கிறார்.

ஆயிரம் ஆயிரம் பக்தர்கள் நாள்தோறும் திருமலை திருப்பதியை நாடிப்போகிறார்கள்.

அவர்கள் பல திறப்பட்டவர்கள். அவர்களில் கூனனும் உண்டு, குருடனும் உண்டு, முடவனும் உண்டு, ஊமையும் உண்டு.

உடலில் மட்டுமல்ல, உள்ளத்திலும் கூன், குருடு, முடம், ஊமை என்று வாய்த்தவர்களும் உண்டு.

திருப்பதி — திருமலை எல்லையை மிதித்த உடனேயே இவர்களை விட்டு இவர்களுடைய ஊனம் எல்லாம் ஓடி விடுகின்றனவாம்.

குருடன் தேன் கூட்டை 'இதோ இதோ' என்று காட்டுவானாம். முடவனோ மரத்தில் ஏறி தேனை எடுத்து வருவானாம். கூனல் நிமிர்ந்து 'எனக்கில்லையா தேன்' என்று கூனன் ஓடி வருவானாம். ஊமையும் 'என் பங்கைக் கையில் கொடய்யா' என்று அதட்டிக் கேட்பானாம்.

வடமலை மேல் நின்ற மாதவன் அப்படி அருள்கிறான் வரங்களை.

**பாடல் — கட்டளைக்கலித்துறை**

கூன்கொண்டு சென்றவன்
கூன்நிமிர்ந் தோடக்,
குருடன்கொம் பில்த்

தேனென்று காட்ட,
முடவன்அத் தேனை
எடுக்க, அயல்
தான்நின்ற ஊமை
எனக்கென்று கேட்கத்
தருவன் வரம்;
வான்நின்ற சோலை
வடமலை மேல்நின்ற
மாதவ னே.

*இனி, திருமலை திருப்பதி தேவஸ்தானத்து அதிகாரிகளும் அப்படியே அள்ளி அள்ளிக் கொடுக்கிறார்கள். பக்தியை வளர்க்க கலைகளை வளர்க்க, பண்பாட்டையும், வழிபாட்டையும் ஒழுக் கத்தையும் வளர்க்க வரம் தந்து பொழிகிறார்கள்.*

*ஆன்றோர்களையும் சான்றோர்களையும் ஆதரித்து உதவுகி றார்கள்.*

குழந்தையும் தெய்வமும் என்னும் இந்நூல் வெளிவருவதற்கு ரூ. *20,000/- (ரூபாய் இருபதினாயிரம்)* கொடுத்து உதவி இருக்கிறது திருமலை திருப்பதித் திருக்கோயில்.

இது அதிசயம் இல்லையா? இப்படி ஒரு அதிசயம் வேறு ஒரு கோயிலிலும் இல்லையே!

நூல் வெளிவர உதவிய திருக்கோயிலின் தமிழ் - பக்தித் துறைத் தலைவர் (ஆசிரியர்) அவர்களுக்கும், திருக்கோயில் நிர்வாகத்தலைவருக்கும் என் மனப்பூர்வமான நன்றி.

*இனி மெய்யுணர்வு பெற்ற ஞானிகளுக்கு மாசற்ற காட்சிய வர் என்று பெயர். வாலறிவு என்றும், மாசறு காட்சி என்றும் வள்ளுவர் குறிப்பிடுவது இதைத்தான்.*

*நம் காலத்தில் - இந்த இருபதாம் நூற்றாண்டில் அத்தகைய பல ஞானிகளை - மகாத்மா காந்தியடிகள்,* வினோபாவே, ரவீந்திரநாத் தாகூர், ஆல்பர்ட் ஐன்ஸ்டைன் போன்ற பல ஞானிகளைக் கண்டு களிக்க முடிந்தது.

*அத்தகைய மெய்ஞ்ஞானிகளில் ஒருவர் ரசிகமணி, டி.கே. சிதம்பரநாத முதலியார்.*

எல்லையற்ற அன்பும், தூய ஞானமும், அப்பழுக்கற்ற எளிமையும் சேர்ந்தெடுத்த அவதாரம் அவர்.

அன்னாருடைய பேரன், திரு. தீப, சிதம்பரநாதன் ஒரு நிறைகுடம். நவரத்தினங்கள் பதித்த தங்கக்குடம். தேவாமிர்தம் பொங்கி வழியுச பொற்குடம்.

செருக்கும் படாடோபமும் மலிந்த இந்தக்காலத்தில் இப்படி எளிமையோடும் தூய்மையோடும் ஒருவரால் வாழ முடிகிறதே என்று கண்டோர் வியக்கும் வண்ணம் வாழ்கிற மனிதர் - மாமனிதர் திரு. தீப. சிதம்பரநாதன்.

தீப. சிதம்பரநாதன் எனக்கு எழுதிய கடிதம் ஒவ்வொன்றும் உள்ளத்து உணர்வுகளை அப்படி அப்ப்டியே எடுத்துக்காட்டும்.

இங்கே அவருடைய கடிதம் ஒன்றை நூலுக்கு அணிந்துரை யாக வைத்திருக்கிறது.

இதை விட வேறு அணிந்துரை என்ன இருகர்கிறது.

திரு. தீப. சிதம்பரநாதன் அவர்களுக்கு நன்றி.

நூலை நல்ல முறையில் அச்சிட்டுக்கொடுத்த சக்தி பிரிண் டர்ஸ் நிர்வாகிகளுக்கும் நன்றி.

இப்படிக்கு
**ல. சண்முகசுந்தரம்**

# குழந்தையும் தெய்வமும்

தாயின் வயிற்றுள் தவமிருந்து குழந்தையாய் அவதரிக்கிறது கடவுள்தான்.

கவிஞனுடைய அனுபவம் உணர்ச்சியால் ஊறிக் கவிதையாக அவதரிக்கிறதும் கடவுள்தான்.

பெரியாழ்வார் பாசுரம் ஒவ்வொன்றும் திருமாலின் திரு அவதாரமேதாம். ஆழ்வார்கள் பன்னிருவர். அவர்களில் மரியா தைக்கும் வணக்கத்துக்கும் உரிய மிகச் சிறப்புடைய ஒருவர். அவர் தாம் பெரியாழ்வார்.

இனி, குழந்தையைப் பார்க்கப் பார்க்க அதிசயமாக இருக் கும். ''இது எங்கிருந்து வந்தது, எப்படி வந்தது?'' என்று யோசிக்க யோசிக்க புளகாங்கிதமாக இருக்கும்.

''கடவுள் கொடுத்த செல்வம், அவர் கொடுத்த வரப்பிரசா தம், தெய்வம் எடுத்த திரு அவதாரம்'' என்று மனம் தெரியும்.

ஒரு பெண் கர்ப்பவதியாய் இருக்கிறாள். அவளைப் பார்க்கிறவர்கள் ஒவ்வொருவருக்கும் இதயத்தில் ஒரு பரிவு உண்டாகும். ''பிள்ளையும் தாயும் பழுதில்லாதபடி சௌகர்யமாய் இருக்க வேண்டும்'' என்று அருள் உணர்வு சுரக்கும்.

இப்பொழுது பெண்ணானவள் தாயாகி விட்டாள். குழந்தை பிறந்து விட்டது 'குவா, குவா' என்று குழந்தை சத்தம் போடுகிறது.

விபரம் தெரிந்தவுடன் எல்லோரும் ஓடி வருவார்கள். நாலா திசையிலிருந்தும் ஓடி வருவார்கள். பாவாடை கட்டிய சிறுமிகளி லிருந்து அறுபது, எழுபது வயதைத் தாண்டிய மூதாட்டிகள் வரை ஒவ்வொருவரும் ஓடி வருவார்கள்.

உடைமாற்றம், அலங்காரம் ஒன்றையும் கவனிக்க மாட்டார் கள். தோசைக்கு அரைத்துக் கொண்டிருந்தவர்கள் கூட, மாவை வழித்துப் போடாமல் அப்படி அப்படியே ஓடி வருவார்கள்.

குழந்தையைப் பார்ப்பதில் அப்படி ஒரு ஆர்வம். ஒரு கிண்ணத்தில் எண்ணெய், இன்னொரு கிண்ணத்தில் வாசனைப்

பொடி இவைகளை எடுத்துக்கொண்டு பெண்டுகள் ஓடி வருவார்கள்.

வேகமாக ஓடி வரும்பொழுது இன்னொரு பெண்மேல் மோதுவதும் உண்டு. குழந்தையைப் பார்க்கப்போகிற ஆனந்தத்தில் பெண்கள் ஒருவரை ஒருவர் ஆலிங்கனம் செய்து கொள்வதும் உண்டு. கையில் உள்ள வாசனை பொடியும் எண்ணெயும் சிந்தி சகதி ஆவதும் உண்டு. அதில் வைத்த கால் வழுக்குவதும் உண்டு.

இந்த உல்லாசத்தையும் எக்களிப்பையும் நெடுகிலும் மக்கள் அனுபவித்து வந்திருக்கிறார்கள். பெயர் சூட்டல், காது குத்தல், முடி எடுத்தல் என்றெல்லாம் விழா எடுத்தே அனுபவித்து வந்திருக்கிறார்கள்.

கவிஞர்களும் ஆனந்தமாய் அனுபவித்திருக்கிறார்கள். பக்தர்களும் ஞானிகளும் அப்படியே அனுபவித்து வந்திருக்கிறார்கள்.

பரமபக்தரும் ஞானியுமான பெரியாழ்வார் ஆனந்தமயமாய் அனுபவிக்கிறார். ஒரு பெண் தாயாகிற அற்புதம் ஒன்று, இறைவனே குழந்தையாக அவதரித்தான் என்னும்படி குழந்தை வந்த அற்புதம் ஒன்று, உற்றாரும், உறவினரும் துள்ளி மகிழும் அற்புதம் ஒன்று எல்லாவற்றையும் பார்த்துப்பார்த்து அனுபவிக்கிறார் பெரியாழ்வார்.

வடமதுரையில் வசுதேவருக்கும், தேவகிக்கும் மகனாகப் பிறந்து ஆயர்பாடியில் யசோதையிடம் வளர்ந்த கிருஷ்ண பகவானே இங்கே குழந்தையாக வந்து அவதரித்து விட்டான் என்று அனுபவிக்கிறார்.

ராமேஸ்வரம் போகிற வழியில் இருக்கிறது மானாமதுரை, மானா மதுரைக்கு வடகிழக்கே இருபத்து ஐந்து மைல் தொலைவில் இருக்கிறது திருக்கோட்டியூர்.

வைஷ்ணவர்களுக்கு மிக முக்கியமான புண்ணிய ஸ்தலம் திருக்கோட்டியூர்.

தெய்வீகமான மூல மந்திரத்தை கண்டுதெரிந்த உடனேயே எல்லோரும் இதன் பலனை அனுபவிக்க வேண்டும் என்ற

தயாளத்தில் கோபுரத்தில் ஏறி நின்று அந்த மந்திரத்தை ராமாநுஜர் முழக்கினார். அந்த இடம் இந்தத் திருக்கோட்டியூர் தான்.

அதே திருக்கோட்டியூர் ஆயர்பாடியில் அதே கிருஷ்ண பகவான் வந்து அவதரித்து விட்டான் என்று அனுபவிக்கிறார் பெரியாழ்வார்.

ஒவ்வொரு குழந்தையும் கண்ணனாகவே படுகிறது ஆழ்வா ருக்கு.

திருக்கோட்டியூர், ஆயர்பாடி, கிருஷ்ண பகவான், ஆயர்கள் எல்லாமே குழந்தையை அனுபவிக்கும் அனுபவத்தில் வருகிற ஆனந்த அற்புதங்கள்தாம்.

தாயின் ஆனந்தமயமான பார்வையோடு கவிஞர்களும் பக்தர்களும் சேர்ந்து பார்க்கிறார்கள்.

அப்படிப் பார்ப்பதால் சாதாரணக் குழந்தை தெய்வம் ஆகி விடுகிறது.

இனிப் பாடலைப் பார்ப்போம்.

குழந்தை பிறந்து விட்டது என்று கேள்விப்பட்டார்களோ இல்லையோ, பெண்கள் தங்கள் காரியங்களை அப்படி அப்ப டியே போட்டுவிட்டு ஓடி வருகிறார்கள்.

பாடல்கள் கலிவிருத்தம் என்னும் இனத்தைச் சேர்ந்தவை.

**தான தன்ன**
**தன்ன தான**

**வண்ண மாடங்கள்**
**சூழ்திருக் கோட்டியூர்**

**கண்ணன் கேசவன்**
**நம்பி பிறந்திலில்**

**எண்ணெய் சுண்ணம்**
**எதிர்எதிர் தூவிடக்**
**கண்ண முற்றம்**
**கலந்தள(று) ஆயிற்றே!**

வண்ண - அழகிய. சுண்ணம் - வாசனைப்பொடி

*குறிப்பு:* வரலாறு என்று ஒன்று இருக்கிறது.கலை, இலக்கியம், பக்தி, விவசாயம், வாணிகம்,போர், காதல், ஞானம், விஞ்ஞானம் எல்லாவற்றினுடைய வரவு செலவும் அதில்தான் அடக்கம்.

மனிதன் என்றால் வரலாற்றின் அத்தியாயம் என்று பொருள். வரலாறு என்னும் மாகாவியத்தின் ஒவ்வொரு வரியையும் ஒவ்வொரு எழுத்தையும் மனிதனே விதியின் கையைப் பிடித்து எழுதுகிறான்.

மனிதன் பிறக்கிறான் என்றால், சாதாரண காரியமா? அவதார மகிமைதான். அதை மேளதாள முழக்கத்தோடு வரவேற்கிறது தமிழ்.

கைதட்டி வரவேற்கும் தமிழின் உல்லாசம் தாளத்திலும், இசையிலுமாய் சேர்ந்து பாடப்பாட தரிசனம் கொடுக்கும்.

இனி நான் முந்தி, நீ முந்தி என்று பெண்கள் ஓடி வருகிறார்கள். குழந்தை பிறந்த வீட்டில் உள்ளும், வெளியிலும் ஒரே நெரிசல். கூட்டம் கூடி விட்டதால் குழப்பம் வந்துவிடுகிறது.

ஆவலோடு குழந்தையை எடுத்து பெண்டுகள் அனுபவிக்கி றார்கள். மற்றப் பெண்களும் குழந்தையை எடுத்துப் பார்க்கத் துடிக்கிறார்கள்.

புதிதாக வந்த பெண்கள் தாயைப் பார்க்கிறார்கள். தாயின் பக்கம் குழந்தையைக் காணவில்லை. "எங்கே போய் ஒளிந்து கொண்டான். 'உறியில் இருக்கும் வெண்ணெயைத் தேடிப் போய்விட்டானா" என்றெல்லாம் நொடியும் மடக்குமாய் வருகி றது பேச்சு.

பேச்சின் உல்லாசத்தில் எல்லோருக்கும் ஒரு கிளுகிளுப்பு. அப்படியே சந்தோஷ மிகுதியில் ஒருவரை ஒருவர் அணைத்துத் தழுவிக் கொள்கிறார்கள். குழந்தையை எடுத்து ஆலிங்கனம் செய்கிற பாவனையில் பெண்கள் ஒருவரை ஒருவர் தழுவிக் கொள்கிறார்கள்.

முற்றத்தில் இளைஞர்களின் ஆட்டமும் பாட்டமும் ஒரே அமர்க்களந்தான்.

ஓடு வார் விழு
வார், உகந்(து) ஆலிப்பார்,
நாடு வார், நம்
பிரான்எங்குத் தான் என்பார்.
பாடு வார்களும்,
பல்பறை கொட்டநின்(று)
ஆடு வார்களும்,
ஆயிற்றப் பாடியே!

குழந்தை பிறந்த உடன் தெருவில் உள்ளவர்கள் பக்கத்துத் தெருவில் உள்ளவர்கள் எல்லோரும் அவசரம் அவசரமாக வந்தார்கள். ஆரவாரமாய் இருந்தது வீடு.

குழந்தை பிறந்து இரண்டுநாள், மூன்று நாள் என்று ஆகிறது. பக்கத்து ஊர்களில் உறவினர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்கு குழந்தை பிறந்த விபரம் தெரிகிறது.

குடும்பத்தோடு அவர்கள் புறப்பட்டு வருகிறார்கள். மூட்டை முடிச்சுகளோடு புறப்பட்டு வருகிறார்கள். வெற்றிலைக்கட்டு, பழக்குலை, சர்க்கரைப் பொங்கல் இப்படி எதை எதையோ அவர்கள் எடுத்துக் கொண்டு வருகிறார்கள்.

மகனைப் பார்க்கணும், பேரனைப் பார்க்கணும், மருமகனைப் பார்க்கணும், தம்பியைப் பார்க்கணும், மைத்துனனைப் பார்க்கணும் என்னும் ஆவலோடு வருகிறார்கள்.

பிறந்த குட்டிப் பாப்பாவை வைத்து எதை எதையோ அவர்கள் உல்லாசமாகப் பேசி வருகிறார்கள். உல்லாசத்தில் சிரிப்பும் கும்மாளியும் கட்டிப்புரள்கின்றன.

விரிந்த முல்லை மலர்களைப் போல வெள்ளை வெளேர் என்று அப்பொழுது பற்கள் ஜொலிக்கின்றன.

பனையோலை, தென்னை ஓலை கொண்டு முடைந்த பாயை தலையில் போட்டிருக்கிறார்கள். வெயில் மழை இரண்டுக்கும் உபயோகம் அந்த ஓலைப்பாய்.

கையில் கம்பும் வைத்திருக்கிறார்கள். கோடாலி போன்ற கத்தியும் வைத்திருக்கிறார்கள்.

*உற்றார், உறவினர்களாகிய ஆயர்கள் இப்படி வந்தார்கள். தலையில் வைத்திருந்த மூட்டையையும் தோளில் போட்டிருந்த நெய் உறியையும் எடுத்து குழந்தை முன் வைத்தார்கள். ஆரவாரித்து மகிழ்ந்தார்கள்.*

*பிறகு தலையில் போட்டு உடம்பை மூடி இருந்த ஓலைப்பாயை எடுத்துத் தரையில் போட்டார்கள். வரிசையாக உட்கார்ந்தார்கள். சர்க்கரைப் பொங்கலும், புளியோதரையும், ததியோதனமுமாக விருந்துண்டார்கள்.*

*குழந்தையை வாழ்த்தி வாழ்த்தி விருந்துண்டார்கள்.*

கொண்ட தாளஉறி
  கோலக் கொடுமழு
தண்டி னர், பறி
  ஒலைச் சயனத்தர்,
விண்ட முல்லை
  அரும்பன்ன பல்லினர்,
அண்டர் மிண்டிப்
  புகுந்துநெய் ஆடினார்!

*பிரசவத்துக்கு இரண்டு மாதங்களுக்கு முன்பே தாய்வீட்டார் தங்கள் வீட்டுக்குப் பெண்ணை அழைத்துப் போவார்கள். பிரசவம் அங்கேதான்.*

*இரண்டு மூன்று பிரசவம் ஆனபின் புகுந்த இடத்திலேயே பிரசவம் ஆவதும் உண்டு. அப்பொழுதும் பெண்ணின் தாய் குழந்தையின் பாட்டி அங்கு முன்கூட்டியே வந்துவிடுவாள்.*

*பாட்டியம்மாள்தான் தாய்க்கும் குழந்தைக்கும் உற்றதுணை. அவள்தான் பாதுகாவல்.*

*பிரசவ வீட்டில் தாய்க்கும் குழந்தைக்கும் பாட்டியம்மா செய்கிற காரியங்களையும், செய்முறைகளையும், பக்குவங்களையும் பார்த்தால் அதிசயமாக இருக்கும்.*

*என்ன துல்லியம், என்ன கணக்கு, என்ன பொறுமை, என்ன அடக்கம், எவ்வளவு ஞாபகசக்தி என்று வியந்து உருகி விடுவோம்.*

அத்தனையும் ஒழுங்காக நடக்க வேண்டும். நெறிமுறை யோடு நடக்க வேண்டும். மஞ்சாடிக்கூடப் பிசகக்கூடாது.

பொறுப்பில்லாமல் போய்விட்டால் தாயும் இல்லை, குழந் தையும் இல்லை. மனுச வார்க்கத்தின் கதையே பிறகு அப்படி அப்படித்தான்.

ஒவ்வொரு நாளும் குழந்தையை எடுத்துக் குளிப்பாட்டுவாள் பாட்டியம்மாள். அது ஒன்றைப் பார்த்தாலே போதும். 'பொறுப் பையும் நிதானத்தையும் எப்படிப் பெண்பாலரிடம் கொண்டு போய் ஒப்படைத்திருக்கிறது இயற்கை' என்பது தெரியவரும்.

குழந்தையை எடுத்துக்கொண்டு அங்கணத்துக்குப் போவாள். சிறு பலகை ஒன்றில் உட்கார்ந்து கொள்வாள். தன் இரண்டு கால்களையும், நீட்டி ஒன்றுசேர்த்துக் கொள்வாள். நீட்டிய கால்களில் குழந்தையை உட்கார வைப்பாள். குழந்தையின் தலையில் எண்ணெய் வைத்து மெள்ளத் தேய்ப்பாள். பிறகு குழந்தையைத் தன் கால்களில் படுக்க வைப்பாள். குழந்தையின் கால்களையும், கைகளையும் நீட்டி நீவுவாள். எண்ணெய் வைத்துத் தேய்ப்பாள். மார்பு, முதுகு எங்கும் எண்ணெய் வைத்துத் தேய்ப்பாள்.

வெது வெது என்றிருக்கும் இளம் சூட்டு வெந்நீரை இரண்டு மூன்று செம்பு எடுத்து விடுவாள். அரைத்து வைத்த மஞ்சளைக் குழந்தையின் முகத்திலும் உடம்பிலும் பக்குவமாகப் பூசுவாள். வெந்நீரை எடுத்து விட்டுக் குளிப்பாட்டுவாள்.

கண்ணைத் துடைப்பாள். காதைத் துடைப்பாள். குழந்தை யின் மூக்கிலிருந்து சளி வெளிவரும்படி மூக்கைப் பிடித்துச் சிந்தி விடுவாள்.

மஞ்சள் துண்டை வகிர்ந்து அது கொண்டு குழந்தையின் நாக்கைத் தடவி விடுவாள். நாக்கில் உள்ள சளி, கோழை எல்லாம் வெளியில் வந்துவிடும்.

இவ்வளவையும் குழந்தை எப்படித்தாங்கும். விம்மி விம்மி அழும். ஆனால் வெந்நீரை விட விட அழுகை குறையும்.

*குழந்தையை நன்றாகத் துவட்டி தலைமயிரைக் கோதிவிட்டு, நெற்றியைத் தடவிக் கொடுப்பாள். பிறகு பொட்டிட்டு, அண்டை கொடுத்த துணியோடு தாயின் பக்கத்தில் படுக்க வைப்பாள்.*

*குழந்தையைத் தாய் அணைத்துப் படுப்பாள். குழந்தையின் கோபம் எல்லாம் ஆறிவிடும். பிறகு குழந்தையைத் தடவிக் கொடுத்தபடியே அதன் கண்களை உற்றுப் பார்ப்பாள். குழந்தையும் தாயை ஆவலோடு பார்க்கும்.*

*அப்புறமும் குழந்தையைச் சேர்த்து அணைத்துக் கொள்வாள். குழந்தை கையையும் காலையும் உதறும்.*

*தாயைப் பார்த்து வாய் திறந்து சிரிக்கும் குழந்தை. அந்தப் பொக்கை வாய்க்குள்ளிருந்து என்னென்ன எல்லாமே தெரியும். குழந்தை சிரிக்க சிரிக்க தாய்க்கு ஒரே அதிசயம்.*

*தன்னையே அந்தச் சிரிப்பில் தாய் பார்த்துப் பரவசப்படுவாள். அண்டபிண்ட சராசரங்கள் எல்லாம் ஒருசேர எதிரில் வந்து நின்றால் எப்பப் பெருமிதம் உண்டாகும். அப்படி ஒரு பெருமிதத்துக்கு ஆளாவாள் குழந்தையின் சிரிப்பில் தாய்.*

கையும் காலும்
அமுக்கிக் கடாரநீர்
பைய ஆட்டிப்
பசுஞ்சிறு மஞ்சளால்
ஐய நாவழித்
தாளுக்(கு)அங் காந்திட
வையம் ஏழும்கண்
டாள்பிள்ளை வாயுளே?

அங்காந்திம - வாயைத்திறக்க. வையம் - உலகம்

*குழந்தை பிறந்து பதினோரு நாட்கள் ஆகிவிட்டன. விருந்தினர்கள் வந்து வந்து போகிறார்கள். தாயும் குழந்தையும் படுகுஷி. ஒருவரோடொருவர் பார்வையாலேயே பேசிக்கொள்கிறார்கள். என்னென்னவோ பேசிக்கொள்கிறார்கள்.*

*பன்னிரண்டாவது நாளும் வந்துவிட்டது. குழந்தைக்கு இன்று பெயர் வைக்க வேண்டும். உற்றார் உறவினர் எல்லோரும் கூடி இருக்கிறார்கள்.*

குழந்தையை நீராட்டி அலங்காரம் பண்ணி இருக்கிறது. குழந்தை படுத்திருக்கிறான். தவழ்வதற்கு உன்னி உன்னி முண்டுகிறான்.

குழந்தையை ஒவ்வொருவராக கையில் எடுக்கிறார்கள். பாட்டன்மார், பாட்டிமார், மாமன்மார், மாமிமார், தகப்பன், தாய் என்று கைமாறிக் கைமாறிப் போய்க்கொண்டிருக்கிறான் பையன்.

கோவர்த்தனம் என்னும் மகாபர்வதத்தையே கையில் எடுத்து குடை போலத் தூக்கி பிடித்த கண்ணனைத்தான் - அதே கண்ணனைத்தான் ஆயர்கள் எடுத்து எடுத்துக் கொடுத்தார்கள். ஒவ்வொருவரும் ஊஞ்சலாட்டுவது போல் ஆட்டி மகிழ்ந்தார்கள்.

இப்படியாக நடந்தது 'பெயர் சூட்டு விழா.

பத்து நாளும்
  கடந்த இரண்டாம்நாள்
எத்தி சையும்
  சயமரம் கோடித்து
மத்த மாமலை
  தாங்கிய மைந்தனை
உத்தா னம்செய்து
  உகந்தனர் ஆயரே!

குட்டிப்பாப்பா - கண்ணன் பிறந்து ஆறு மாதங்கள் ஆகிவிட்டன. இப்பொழுது தாய்வழிப் பாட்டன் வீட்டிலிருந்து குழந்தையும் தாயும் சொந்த வீட்டுக்கு வந்து விட்டார்கள்.

இனிமேல், "உன் பாடு, உன் பிள்ளை பாடு" என்று செல்லமாக அலுத்துச் சலித்துச் சொல்லிவிட்டு பாட்டியம்மாளும் அவள் குடும்பத்தாரும் தங்கள் ஊருக்குப் போய்விட்டார்கள்.

அங்கொரு சமயம் இங்கொரு சமயம் என்று தகப்பனானவன் பிள்ளையைப் பார்க்கிறது உண்டு. கொஞ்சுவதும் உண்டு. விளையாடுவதும் உண்டு. ஆனால் குழந்தைக்குத் தாய்தான் துணை. தாய்க்குக் குழந்தைதான் துணை.

குழந்தைக்கு இப்பொழுது வயது ஒன்றாகிவிட்டது. 'தள தள' என்று வளர்ந்து வருகிறான் கண்ணன்.

குறும்பும் சேர்ந்தே வளர்கிறது. சேட்டையும் போட்டி போட்டுக்கொண்டு வளர்கிறது. படுசுட்டியாய் 'துறுதுறு' என்று வருகிறான் பையன்.

'கண்' எங்கே என்று கேட்டால் போதும். ஒரு சிமிட்டுச் சிமிட்டிக் கண்ணைக் காட்டிவிடுவான். மூக்கு எங்கே என்றால் ஒரு சுருக்குச் சுருக்கிக் காட்டுவான். வாய் எங்கே என்றால் போதும். அகலத்திறந்து காட்டுவான். உதடு எங்கே என்றால் குவித்துக் காட்டுவான்.

அம்மாவுக்கு கண் எங்கே இருக்கிறது என்றால் வெட்கப் பட்டு குனித்து தன்னையே காட்டிவிடுவான்.

இவ்வளவையும் எளிதில் படித்துவிட்டான். நன்றாக ஞாபகத் திலும் வைத்துக்கொண்டான்.

குறும்பும் சேட்டையும் இவ்வளவோடு நிற்கவில்லை. தாயைப் பாடாய் படுத்துகிறான். ஒரு வேலையையும் ஒழுங் காய்ப் பார்க்கவிட மாட்டேன் அம்மாவை என்கிறான்.

தண்ணீர்த் தொட்டியில் கையை விடுகிறான். கொதிக்கும் குழம்புச் சட்டிக்குள்ளும் கையைவிட நீட்டுகிறான்.

என்ன செய்வாள் தாய், பாவம்.

ஒவ்வொன்றையும் ஆனந்தமாய் அனுபவிக்கிறான்.

ஒருநாள் அவளுக்கே கோபம் வந்துவிட்டது. சமையல் காரியம் ஒன்றையும் பார்க்கவிடாமல் சண்டித்தனம் பண்ணினான் பையன்.

உப்பை அள்ளி காய்ச்சிய பாலில் போட்டான். மோரை எடுத்துக் குழம்புச் சட்டியில் ஊற்றினான். எண்ணெயைத் தண்ணீரில் கொட்டினான். தண்ணீரை நெய்யில் ஊற்றிவிட்டான்.

பிறகு என்ன செய்ய. ஒரு கயிற்றை எடுத்தாள். குழந்தையின் அரைஞாண் கயிற்றோடு சேர்த்துக் கட்டினாள். அதை அப்படியே

கொண்டு வந்து நிலையின் கொண்டியில் போட்டு முடித்துவிட் டாள்.

மரப்பாச்சி, கொலுப் பொம்மைகளை அள்ளி வந்து குழந்தையின் முன் போட்டுவிட்டாள்.

விளையாட்டுச் சாமான்கள் ஒவ்வொன்றையும் எடுத்து திசைக்கு ஒன்றாக விட்டெறிந்தான் பையன். எறிந்த சாமான்களை எடுப்பதற்கு அப்படியும் இப்படியும் தவழ்ந்து பார்த்தான். சில பொருள் சிக்கின. சில பொருள் சிக்கவில்லை.

கையில் சிக்கவில்லை என்றவுடன் பையனுக்கு ஆத்திரம் வருகிறது. அழுகையே வந்துவிடுகிறது. கத்துகிறான். கதறுகி றான். தரையில் குனிந்து முட்டுகிறான். என்னதான் செய்வாள் பெற்றவள். சாமான்களை எடுத்து குழந்தையின் முன் போடுகி றாள் தாய். மறுபடியும் சிதறுகிறது சாமான்.

அலுப்பு வருகிறவரை இப்படித்தான். சிதறுவதும், சேர்ப்ப தும், அம்மா வந்து எடுத்து வைப்பதும் இப்படியாக இருக்கிறது.

குழந்தை அலுத்துப் போய்விட்டது. அப்படியே செங்கல் தரையில் படுத்துவிட்டான் பையன். தலையணை ஒன்று எடுத்து வந்து குழந்தைக்கு தலைக்கு வைத்தாள் தாய்.

இரண்டு முழந்தாள்களையும் தரையில் ஊன்றி, தலையணை யில் முகத்தை வைத்துத் தூங்கிவிட்டான் பையன்.

இந்த காட்சியைப் பக்கத்தில் நின்று பார்த்துப் பார்த்து அனுபவித்தாள் தாய். அந்த வேளையில் அதே தெருவில் இருக்கிற சிநேகிதி ஒருத்தி அங்கு வந்தாள். அவளும் குழந்தை படுத்து உறங்குகிற கோலத்தைப் பார்த்து அனுபவித்தாள்.

பிறகு தாயிடம் கேட்டாள், ''ஏனடி இவ்வளவு இளைத்து விட்டாய், துரும்பாய்ப் போய் விட்டாயே'' என்று.

அதற்குத் தாய் சொல்லிய பதில் இதுதான்:

இந்தப்பிள்ளையை வைத்துக்கொண்டு இளைக்காமல் என்ன செய்வது? இவன் அட்டகாசத்தைத் தாங்க வேண்டுமானால் இரும்பால்தான் பிரமதேவன் என்னைப் படைக்க வேண்டும்.

*அரை நாழிகையாவது சும்மா இருக்கானா? இல்லை, அரை நாழிகையாவது தொட்டிலில் கிடந்து தூங்குகிறானா?*

கிடக்கில் தொட்டில்
கிழிய உதைத்திடும்
எடுத்துக் கொள்ளில்
மருங்கை இறுத்திடும்
ஒடுக்கிப் புல்கில்
உதரத்தே பாய்ந்திடும்
மிடுக்கி லாமையால்
நான்மெலிந் தேன்நங்காய்!

மருங்கு - இடுப்பு. உதரம் - வயிறு. மிடுக்கு -பலம்.

*கவிஞர்களை எடுத்துக்கொண்டால், அதில் ஆண்களும் உண்டு. பெண்களும் உண்டு. அவர்கள் யாராக இருந்தாலும், குழந்தைகளை நன்றாக அனுபவிப்பார்கள். தாய் போலவே அனுபவிப்பார்கள். ஆனால் உண்மையில் அவர்கள் கவிஞர்களாக இருக்க வேண்டும்.*

*பெரியாழ்வார் மாசற்ற ஞானி. பரம பக்தர். தெய்வீகக் கவிஞர். தாய் அனுபவிப்பது போலவே குழந்தையை அனுபவிக் கிறார்.*

*பெரியாழ்வாரின் அனுபவத்தை தாளத்திலும் இசையிலும் வைத்து அபிநயம் பிடித்துக் காட்டுகின்றன பாடல்கள். உண்மை யான பிள்ளைத்தமிழ் - பாப்பாப்பாட்டு கிடைத்து விட்டது தமிழுக்கு.*

*கிருஷ்டி தத்துவம் என்பது நடந்து கொண்டே இருக்கிறது. பேரண்டம் முழுவதும் தொடர்ந்து நடந்துகொண்டே இருக்கிறது.*

*கோழி முட்டைக்குள் ஒரு சிரங்கை தண்ணீர்தான். மயில் முட்டைக்குள்ளும் ஒரு சிரங்கை தண்ணீர் தான்.*

*கோழி முட்டைக்குள்ளிருந்து கோழிக் குஞ்சுதான் வரும். மயில் முட்டைக்குள்ளிருந்து மயில் குஞ்சுதான் வரும்.*

*ஊழூழி காலமாக இந்த ஞாபக சக்தி சிருஷ்டி தத்துவத்துள் நிறைந்து நிற்கிறது. இந்த ஞாபக சக்திதான் உயிர் வர்க்கத்தைப்*

பாதுகாக்கிறது. தாய்மை உணர்ச்சியாய் நின்று குழந்தைகளைக் காப்பாற்றுகிறது.

தன் குட்டிகளுக்கு பூனை எப்படிப் பாய்ச்சலையும் பம்மாத்தையும் சொல்லிக் கொடுக்கிறது என்பதைப் பார்த்தாலே போதும். தாய்மை உணர்ச்சி விளங்கிவிடும்.

குட்டியை வயிற்றோடு சேர்த்து வைத்துக்கொண்டு கிளைக் குக் கிளை தாவிப்பாய்கிறது குரங்கு. பறவைகளோ நெடுந்தூரம் சென்று, இரையைச் சேகரித்து, நன்றாக மென்று, மாவுங் கூழுமாக வாயில் போட்டு ஒதுக்கி வைத்துக்கொண்டு கூட்டிலி ருக்கும் குஞ்சுகளுக்கு வந்து ஊட்டுகின்றன.

எல்லாம் அதிசயந்தான்.

தாயும் குழந்தையும் அதிசயந்தான். இந்த அதிசயத்தை அனுபவிக்க அனுபவிக்க பாஷையானது கவிகளைச் சொரியத் தானே செய்யும்.

# பரவசப்படுத்தும் அழகு

குழந்தையின் ஒவ்வொரு செயலையும் ஒவ்வொரு அசைவையும் அனுபவிப்பாள் தாய். உற்றார், உறவினர், தெருக்காரர், ஊர்க்காரர் எல்லோரும் குழந்தையை அனுபவிப்பார்கள்.

பெண்களின் அனுபவம் தனி. பெற்ற தாய் போலவே ஒவ்வொரு பெண்ணும் அனுபவிப்பாள். தாயின் கண் கொண்டே அனுபவிப்பாள்.

தொட்டிலில் படுத்திருக்கிறது குழந்தை. படுத்திருக்கும் குழந்தை ஒரு காலை வளைத்து வாயின் பக்கம் கொண்டு போகிறது. காலின் கட்டை விரலை வாய்க்குள் கொடுத்து சூம்புகிறது.

இந்தக் காட்சியைப் பார்த்தவுடன் தாயின் உள்ளம் உருகாமல் என்ன செய்யும்? ''வாருங்கள், வாருங்கள். பாருங்கள், பாருங்கள் '' போக்கிரிப் பயல் என்ன செய்கிறான் என்று பாருங்கள்'' என்று சத்தம் போட்டபடி மற்றவர்களைக் கூப்பிடுவாள் தாய்.

சும்மா இருக்க முடியாது அவளால்.

குழந்தையின் செயலைப் பார்த்த வேறு பெண்களின் நிலையும் அப்படித்தான்.

தாய் போலவே அவர்களும் கைதட்டிக் கூப்பிடுவார்கள். தெருவில் போகிற வருகிற பெண்களைக் கூட அழைத்துக் காட்டுவார்கள்.

தேவகியின் வயிற்றில் பிறந்து யசோதையிடம் வந்து வளர்ந்த கோபால கிருஷ்ணனாகவே தெரிகிறான் தொட்டிலில் கிடக்கிற பையன்.

இனி பாடலைப் பார்ப்போம் - கலித்தாழிசை

தான தான
தன்னான தான
சீதக் கடல்உள்
அமுதன்ன தேவகி

கோதைக் குழலாள்
யசோதைக்குப் போத்தந்த
பேதைக் குழலி
பிடித்துச் சுவைத்துண்ணும்
பாதக் கமலங்கள்
காணீ ரே!
பவளவா யீரீவந்து
காணீ ரே!

கிருஷ்ணன் பிறந்த வீட்டில் பல பசுக்கள் இருந்தன. அவன் வளர்ந்த யசோதை வீட்டிலும் அப்படித்தான்.

நமது கதாநாயகன் இருக்கிறானே குட்டப்பயல், இவன் வீட்டிலும் பால் மாடுகள் பல உள்ளன.

மூலைக்கு மூலை தயிர்க் குடங்களும் மோர்க் குடங்களுமாய் இருக்கின்றன. அங்கங்கே உறிகளைக் கட்டி தொங்க விட்டிருக்கிறது. உறிக் கலயங்களில் வெண்ணெயும் நெய்யுமாய் நிறைந்திருக்கின்றன.

தயிரை மோராகக் கடைகிறாள் தாய். வெண்ணையை எடுத்து எடுத்து கலயத்துள் போடுகிறாள்.

எழுந்திருந்து அவசரமாய் அடுக்களைக்குள் போகிறாள் தாய். 'குடுகுடு' என்று ஓடி வருகிறான் பையன். தயிர்ச் சட்டியைக் கவிழ்த்து விடுகிறான். வெண்ணெயை அள்ளி அள்ளி வாயில் போடுகிறான். கடைவாய் எல்லாம் ஒழுகுகிறது வெண்ணெய்.

தாய்க்குக் கோபம் வந்துவிட்டது. முகத்தில் எரிச்சலை வரவழைத்துக்கொண்டு கண்களை உருட்டுகிறாள். மத்திலிருந்து கயிற்றை உருவி, நான்காக மடித்துக்கொள்கிறாள்.

'உரித்து விடுவேன் தோலை' என்று மிரட்டுகிறாள். பதறிப்போனான் பையன். முழங்கால்களைத் தரையில் ஊன்றியபடியே முன்கட்டுக்கு ஓடி வருகிறான் பையன்.

அந்த நேரம் பக்கத்து வீட்டுக்காரி வந்தாள். பையனுடைய வேகம், முழங்கால், பயம் எல்லாவற்றையும் பார்த்தாள்.

*எல்லோரும் ஓடி வாருங்கள் - வந்து பாருங்கள் என்று சத்தம் போட்டுக் கூப்பிடுகிறாள்.*

உழந்தாள் நறுநெய்
ஒரோர் தடாஉண்ண
இழந்தாள் எரிவினால்
ஈர்த்து எழில்மத்தின்
பழந்தாம்பால் ஓச்சப்
பயத்தால் தவழ்ந்தான்
முழந்தாள் இருந்தவா
காணீரே!
முகிழ்முலை யீர் வந்து
காணீரே!

*குழந்தை படுத்துகிற பாட்டை ஆடவர்களால் தாங்க முடியாது. பெண்களால்தான் அது முடியும். குழந்தையின் விஷமத்தனத்தையும் வம்பு தும்பையும் பார்த்து நன்றாக அனுபவித்தவர்கள், அதற்கு ஒரு உருவகமே பண்ணி வைத்து விட்டார்கள்.*

*அந்த உருவகந்தான் கிருஷ்ணன். வசுதேவருக்குத் தேவகியின் வயிற்றில் பிறந்து யசோதை வீட்டில் வளர்ந்த கிருஷ்ணபரமாத்மா தான் குழந்தைகளின் அடையாளம்.*

*ஒவ்வொரு வீட்டுக் குழந்தையும் ஒவ்வொரு சாதாரணக் கழந்தையும் கிருஷ்ண பரமாத்மாதான்.*

*குழந்தையின் குறும்பையும் அடத்தையும் தாங்க முடியாமல் தத்தளிக்கிற ஒவ்வொரு தாயும் இப்படித்தான் நினைப்பாள்: 'இந்தப் பயல்தான் அந்தக் காலத்தில் யசோதையை அழ அழப்படுத்தினான். வசுதேவருக்கும் தேவகிக்கும் மகனாகப் பிறந்தான். இப்பொழுது என் கழுத்தை அறுக்க வந்திருக்கிறான்!*

*தன்னுடைய குழந்தை அந்தக் காலத்துக் கிருஷ்ணன்தான் என்பதை உண்மையாகவே நம்புகிறாள். உணர்ச்சிமயமாக நம்புகிறாள் தாய். அதனால் 'தான் யார்' என்பதையே மறந்துவிடுகிறாள்.*

*'யசோதை தான் நான்' என்று எண்ணிவிடுகிறாள். இந்த எண்ணமே அவளை ஆட்டு ஆட்டு என்று ஆட்டுகிறது.*

பூதனை என்னும் பெண்பேய் விஷப்பால் கொடுத்துக் கொல்ல, தன் குழந்தையை மடியில் எடுத்து வைத்தது ஞாபகத்துக்கு வருகிறது. பதறிவிட்டாள் தாய். அப்படியே தன் மடியில் தூக்கி வைத்தாள் குழந்தையை.

குழந்தையின் வயிற்றில் கைவைத்து தடவிக் கொடுத்தாள். வெண்ணெய் திருடியதால் கயிறு கொண்டு கட்டப்பட்ட வயிறல்லவா இது என எண்ணினாள். சிரித்துவிட்டாள் தாய்.

அதிரும் கடல்நிற
வண்ணனை ஆய்ச்சி
மதுர முலைஊட்டி
வஞ்சித்து வைத்து
பதறப் படாமே
பழந்தாம்பால் ஆர்த்த
உதரம் இருந்தவா
காணீரே!
ஒளிவளை யீர் வந்து
காணீரே!

வெண்ணெய்த் திருடினான். நெய்யைக் கொட்டினான். தயிர்ப்பா னையை உடைத்து விட்டான்.

உரலைப் பிடித்துக்கொண்டே தொங்கும் உறிக் கலயத்து வெண்ணெயை அள்ளிச் சிந்தினான்.

கோபம் வந்துவிட்டது தாய்க்கு. தாம்புக் கயிற்றால் உர லோடு சேர்த்துக் கட்டிவிட்டாள் பிள்ளையை.

பலம் கொண்டு முண்டியது குழந்தை. உரல் சாய்ந்து விழுந்தது. அதில் சிக்கிய மரப்பலகை, பெட்டி எல்லாம் தூள் தூளாய் நொறுங்கி விட்டன.

என்ன செய்வாள் தாய்?

''இவ்வளவு தைரியமா'' என்று பிள்ளையின் நெஞ்சைப் பார்ப்பாள் தாய்.

பெருமா உரலில்
  பிணிப்புண்(டு) இருந்தங்கு
இருமா மருதம்
  இறுத்தஇப் பிள்ளை
குருமா மணிப்பூண்
  குலாவித் திகழும்
திருமார் (பு) இருந்தவா
  காணீரே!
சேயிழை யீரிவந்து
  காணீரே!

*தவழ்ந்து கொண்டிருந்த குழந்தை எழுந்து நிற்க ஆரம்பித்து விட்டது. நடை வண்டியைப் பிடித்து நடக்கவும் ஆரம்பித்து விட்டது.*

*நடை வண்டியிலிருந்து ஒரு சக்கரம் கழன்று விட்டது. அந்த வட்டை ஒரு கையில் எடுத்துக்கொண்டது குழந்தை. பாலூறும் சிறு சங்கு ஒன்றை மற்றொரு கையில் பிடித்துக் கொண்டது.*

*எழுந்து நடக்க தள்ளாடுகிறது குழந்தை.*

*சக்கராயுதத்தையும் பாஞ்ச சன்யம் என்னும் சங்கையும் ஏந்தி நிற்கும் திருமால் போலவே தெரிகிறது குழந்தை.*

*தாயின் பார்வை அப்படி.*

மைத்தடம் கண்ணி
  யசோதை வளர்க்கின்ற
செய்த்தலை நீல
  நிறத்துச் சிறுபிள்ளை:
நெய்த்தலை நேமியும்,
  சங்கும் நிலாவிய
கைத்தலங் கள்வந்து
  காணீரே!
கனங்குழை யீரிவந்து
  காணீரே!

தாயானவள் ஒரு சிறு தட்டில் சாதத்தையும் நெய்யையும் போட்டுப் பிசைவாள். திரளை திரளையாக உருட்டி வைப்பாள்.

எப்படி எல்லாமோ குழந்தையை ஏமாற்றி ஒவ்வொரு கவளமாக எடுத்து ஊட்டுவாள். நாலு திரளையை ஊட்டுவதற்குள் ளாகவே போதும் போதும் என்று ஆகிவிடும் தாய்க்கு.

அடிக்கடி குழந்தையின் நெஞ்சைத் தடவிக் கொடுப்பாள். சண்டித்தனம் பண்ணும் குழந்தை. பொறுமையை விடமாட்டாள் தாய். ஒவ்வொரு திரளையையும் ஊட்ட ஊட்ட குழந்தையின் வாயைப் பார்ப்பாள். சாதம் இறங்குவதை அனுபவித்து குழந்தை யின் தொண்டையை அடிக்கடி பார்ப்பாள் தாய்.

பேரண்டம் முழுவதையும் ஒரு கவளமாய் உருட்டி திருமால் விழுங்கிய கதை அப்பொழுது ஞாபகத்துக்கு வந்துவிடும் தாய்க்கு.

**வண்டமர் பூங்குழல்**
**ஆய்ச்சி மகனாகக்**
**கொண்டு வளர்க்கின்ற**
**கோவலக் குட்டற்கு**
**அண்டமும் நாடும்**
**அடங்க விழுங்கிய**
**கண்டம் இருந்தவா**
**காணீ ரே!**
**காரிகை யீர்வந்து**
**காணீ ரே!**

குழந்தையின் வாய் - அதாவது உதடு செக்கச் செவேல் என்றிருக்கிறது. பெண்களின் வாயும் அப்படித்தான். தொண்டை மலலரேதான்.

பெண்கள் தம் சிவத்த வாயால் குழந்தையின் வாயில் முத்தம் கொடுக்கிறார்கள். மாறி மாறி முத்தம் கொடுக்கிறார்கள்.

குழந்தையின் வாயே தேனாக ஊறுகிறது. பெண்களோ பருகிப் பருகி பரவசப்படுகிறார்கள்.

*அப்பொழுது அதரம் இன்னும் சிவந்து விடுகிறது.*

எம்தொண்டை வாய்ச்சிங்கம்
வாஎன்(று) எடுத்துக்கொண்டு(டு)
அம்தொண்டை வாய்அமு(து)
ஆதரித்(து) ஆய்ச்சியர்
தம்தொண்டை வாயால்
தருக்கிப் பருகும்இச்
செந்தொண்டை வாய்வந்து
காணீ ரே!
சேயிழை யீர்வந்து
காணீ ரே!

*குழந்தை எப்பொழுதும் அழகாகவே இருக்கும். அப்பொழுதுதான் பூத்து விரிந்த பூ எப்படி இருக்குமோ அப்படி இருக்கும் குழந்தை.*

*ஆனாலும் தாயானவள் குழந்தையை நீராட்டி, துவட்டி, அலங்காரம் செய்தபின் தங்க விக்கிரமாக ஜொலிக்கும் குழந்தை.*

*அப்பொழுது அதன் அழகு தனிதான்.*

நோக்கி யசோதை
நுணுக்கிய மஞ்சளால்
நாக்கு வழித்துநீர்
ஆட்டும்இந் நம்பிக்கு
நாக்கும் நயனமும்
வாயும் முறுவலும்
மூக்கும் இருந்தவா
காணீ ரே!
மொய்குழ லீர்வந்து
காணீ ரே!

*குழந்தையைப் பார்க்கப் பார்க்க தாய்க்கு ஒரே பரவசம். கன்னத்தில் மாறி மாறி முத்துவாள். அதரத்திலும் முத்துவாள். முத்தி முத்தி ஆசையோடு குழந்தையை பார்ப்பாள். குழந்தையின் கண்களை கண்களுக்கு உள்ளே இருந்து எட்டிப் பார்க்கும் ஆனந்தத்தை தாயானவள் கண்டு களிப்பாள்.*

அப்படிப் பார்த்து மகிழ்வதில் அவளுக்கு ஒரு வெறியே உண்டாகும். ஆசையோடு பார்க்கும் குழந்தையின் கண்கள் தாயின் நயனங்களை விட்டு விலகவே விலகா.

விண்கொள் அமரர்கள்
வேதனை தீரமுன்
மண்கொள் வசுதேவர்
தம்மக னாய்வந்து
திண்கொள் அசுரரைத்
தேய வளர்கின்றான்
கண்கள் இருந்தவா
காணீ ரே!
கனவளை யீர்வந்து
காணீ ரே!

ஆசையோடு பார்க்கிறபொழுது எல்லாமே அழகுதான். கரு கரு என்றிருக்கிற குழந்தையின் புருவம் என்ன பாடுபடுத்துகிறது தாயின் உள்ளத்தை.

பருவம் நிரம்பாமே
பாரெல்லாம் உய்ய
திருவின் வடிவொக்கும்
தேவகி பெற்று
உருவு கரிய
ஒளிமணி வண்ணன்
புருவம் இருந்தவா
காணீ ரே!
பூண்முலை யீர்வந்து
காணீ ரே!

குழந்தைக்கு இரண்டு வயது வந்துவிட்டது. தானாக நடந்து போகிறான். முற்றத்துக்கு வந்து விளையாடுகிறான். பக்கத்து வீட்டுச் சிறுவர்களும் முற்றத்தில் வந்து விளையாடுவார்கள்.

காயாம்பூவின் காம்பைக்கொண்டே மணலில் கோடு போட்டு வீடுகட்டி விடுவார்கள். சிறுசிறு கற்களைக் கொண்டே அடுப்பு, பாத்திரம், சமையல், சாப்பாடு எல்லாம் நடத்துவார்கள்.

நம்முடைய கதாநாயகன் அவர்கள் விளையாட்டில் பங்கு கொள்வான். கோபம் வந்துவிட்டால், அவர்கள் கட்டிய வீடு, சோற்றுப்பானை எல்லாவற்றையும் எற்றி அழித்து விடுவான்.

குழந்தையின் குறும்பை பல தடவை பார்த்திருக்கிறாள் தாய். சாதாரண நேரத்தில் தாயின் மடியில் அமைதியாக உட்கார்ந்திருப்பான் பையன். அப்பொழுது அவன் குறும்பு ஞாபகத்துக்கு வரும் தாய்க்கு.

அப்படியே பையனின் நெற்றியைத் தடவிக் கொடுப்பாள் தாய்.

முற்றிலும் தூதையும்
முன்கைம்மேல் பூவையும்
சிற்றில் இழைத்துத்
திருதரு வோர்களைப்
பற்றிப் பறித்துக்கொண்(டு)
ஓடும் பரமன்தன்
நெற்றி இருந்தவா
**காணீ ரே!**
நேரிழை யீர்வந்து
**காணீ ரே!**

குழந்தைக்கு கருகரு என்று தலைமுடி வளர்ந்து விட்டது. எத்தனை தடவை இறுக்கிக் கட்டினாலும் அவிழ்ந்து விடுகிறது முடி. முன்பக்கத்தில் விழுந்த முடி முகத்தையே மறைத்து விடுகிறது.

கையில் ஒரு சுள்ளி அகப்பட்டால் போதும், தங்கப்பூண் கட்டிய கம்பென்று அதை எடுத்து வைத்துக் கொள்கிறான் பையன்.

சின்னஞ்சிறு கற்களை பசு என்றும், கன்று என்றும் வைத்துக் கொள்கிறான். அவைகளைக் காட்டுக்கு ஓட்டிப் போகிறான். சண்டித்தனம் செய்கிற மாடுகளை தட்டி - அதட்டுகிறான். வழிதவறி விலகும் கன்றுகளையும் மாடுகளையும் மறித்துத் திருப்புகிறான்.

*அவ்வளவுக்கும் கல்லும் சுள்ளியுந்தான் துணை. குழந்தையின் இந்த விளையாட்டை அனுபவிக்கிறாள் தாய். அவிழ்ந்து விழுகிற அவன் தலைமுடியையும் அனுபவிக்கிறாள் தாய்.*

அழகிய பைம்பொன்னின்
கோல்அங்கைக் கொண்டு
கழல்கள் சதங்கை
  கலந்தெங்கும் ஆர்ப்ப
மழகன்(று) இனங்கள்
  மறித்துத் திரிவான்
குழல்கள் இருந்தவா
  காணீ ரே!
குவிமுலை யீர்வந்து
  காணீ ரே!

*கோல் - கம்பு. மழகன்று இனம் - பசுவும் கன்றும். குழல் - தலைமுடி.*

# தாலாட்டு

தொட்டில் கம்பு, தொட்டில் கயிறு, தொட்டில் வேட்டி, தொட்டில் என்பதெல்லாம் தமிழ் நாட்டில்தான்.

உலகில் வேறு எங்குமே இவை இல்லை.

தமிழ்நாட்டுப் பழக்கத்தை அனுசரித்து அங்கங்கே சிலர் இதை வைத்திருக்கலாம். மற்றப்படி இது நூற்றுக்கு நூறு தமிழர்களுக்கே உரிய கலை.

தாயானவள் தொட்டிலை விரித்து அதில் குழந்தையைப் படுக்கப் போடுவதே ஒரு அழகு. பிறகு தொட்டிலைப் பிடித்து சொகுசாக அவள் ஆட்டுகிற அழகு இருக்கிறதே அது தனி.

ஒன்றுக்கும் மசியாமல் சில சமயம் குழந்தை முண்டும். தூங்காமல் மற்றவர்களைத் தூங்கவிடாமல் திமிறும். அப்பொழுது அழகிய பாடல்களைப் பாடி மதுரமாய் இசையிலும், தாளத்திலும் குழந்தையைச் சொக்க வைத்துவிடுவாள் தாய்.

தாய்க்குப் படுக்கையே தொட்டிலடிதான். குழந்தை விழிக்கும் நேரம் எல்லாம் தாயும் விழித்து விடுவாள். குழந்தையைத் தூங்க வைத்த பிறகுதான் தாய் தூங்குவாள்.

அவ்வளவுக்கும் பாட்டுத்தான் துணை.

தொட்டிலை ஆட்டித் தாய்மார் பாடும் பாட்டுக்கு தாலாட்டுப் பாடல் என்று பெயர்.

தாலாட்டுப் பாடல்களில் கற்பனை தாராளமாக வரும். ஒவ்வொரு கற்பனையும் உணர்ச்சிமயமாக இருக்கும். அந்த உணர்ச்சியைப் பார்க்கப் பார்க்க உண்மையின் தொனி இன்னதென்று தெரியும்.

குழந்தைகளை மட்டும் அல்ல. வயதானவர்களையும் உறங்கப் பண்ணிவிடும் பாடல்கள்.

தொட்டில், குழந்தை, தாய், தாலாட்டு எல்லாவற்றையும் நன்றாய் அனுபவித்தவர் பெரியாழ்வார்.

